ஓம்.

# வீரவனம்

என்னும்

# சாக்கை வரலாறு






இஃது

திரிசிரபுரம் மஹாவித்வான்

**ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்**

பாடிய புராணத்தின் சாரம்.

இசைப் பாடல், ஆசிரியர்,
சங்கீதம்.
SP. வீரப்பா அவர்கள்,
புதுவயல்.

உரை ஆசிரியர்,
புலவர். முரு. பழ.
இரத்தினம் செட்டியார்
அவர்கள், விரையாச்சிலை.

**ஸ்ரீ வீரசேகர உமையாம்பிகை கோயில்**

## அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேக மலர்

விகாரி - தை - உ௰அ - உ (10 - 2 - 1960)

30/

# நன்றி உரை

சிவநேசச் செல்வர்களே!

சிவஸ்தல யாத்திரை செய்து, சிவபுண்ணியப் பேறு பெற விரும்பும் உங்களுக்கு இப்பொழுது அரியதோர் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது சீரும், சிறப்பும் மிக்க புதுவயல் நகரத்தைச் சார்ந்த சாக்கோட்டை என்னும் வீரவனம் (இராமநாதபுர மாவட்டத்தில் உள்ளது), மிகப் புனிதமான ஒரு சிவஸ்தலம் ஆகும். இந்த ஸ்தலத்தில் உள்ள திருக்கோயிலைப் புதுப்பித்து, நிகழும் விகாரி ஆண்டு தைத்திங்கள் 28-ம் நாள் அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறுகின்றது இந்த ஸ்தலத்தைச் சென்று நீங்கள் தரிசித்தால் மகத்தான சிவபுண்ணியப் பேற்றினை அடைவீர்கள் என்பது திண்ணம்

இத்தலத்தின் அருமை பெருமைகளை, விரும்பிக் கேட்டாலே சிவசாலோகம் கிட்டுமென்றும், இதை வந்து தரிசித்தால், சிவசாமீபப் பேறு உண்டென்றும், இதில் வசித்தோர் சிவசாரூபம் அடைவரென்றும், இந்தத் தலத்தில் இறந்தோர் சிவசாயுச்சியம் எய்துவரென்றும், "வீரவனப் புராண"த்தில் கூறப்பட்டுள்ளது. இப்புராணம் திரிசிரபுரம் மஹா வித்துவான் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை அவர்களால் பாடப் பெற்றதாகும். எழுநூற்றி நான்கு திருவிருத்தங்கள் கொண்ட இதை மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யரவர்கள் பதிப்பித்தார்கள். இந்தப் புராணத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்களை எல்லோரும் படித்து அறிந்து கொள்ளும் வண்ணம் சுருக்கமாக நமது பேரன்பரும் சைவ சமயத்தைப்பற்றி நன்கு ஆராய்ந்தறிந்து விரிவுரை வழங்கி மக்கள் குலத்தை மகிழ்விக்கும் ஆற்றல் நிறைந்த வருமான, விரையாச்சிலை உயர்திருவாளர். முரு. பழ. இரத்தினம் செட்டியாரவர்கள் வசனமாக எழுதித் தந்துள்ளார்கள். அவர்கள், ஸ்ரீ வீரசேகர உமையாம்

பிகையின் திருவருளால் எல்லா நலன்களும் பெற்று நீடுழி வாழப் பிரார்த்திக்கின்றோம்.

மேலும் இந்த சரித்திரத்தை, நமது நகர் தனவணிக அன்பர், சங்கீதக் கலையில் தேர்ச்சி பெற்றவரும், புதிய பாடல்களை அழகுபெற அமைத்துக் கேட்போர் பரவச முறும்படி பாடும் திறமை மிக்கவருமான உயர்திருவாளர் சங்கீதம். SP. வீரப்பா அவர்கள் [அள. சு. வீ. சுப வீர.] கீர்த்தனை வடிவில், ஒலியும் ஒளியும் ஒருங்கே பெற்றுத் திகழும் வண்ணம் பேரன்புடன் உன்னதமாக அமைத்துத் தந்துள்ளார்கள். அவர்கள் ஸ்ரீ உமா வீர சேகரர் திருவருளால் எல்லா நலன்களும் பெற்று நீடுழி வாழப் பிரார்த்திக்கின்றோம்.

அழகிய வசனமும், இன்னிசைப் பாடலும் நிறைந்து வீரவனத்தின் பெருமையை விளக்கும் இந்தப் புத்தகம் பக்தர்கள் படித்துப் பயன்பெற வேண்டுமென்றநோக்கத்துடன் கும்பாபிஷேகத் திருநாளில் வெளிவருகின்றது. இதை, சிவநேசச் செல்வர்கள் படித்துப் பெருவாழ்வு வாழ்வார்களாக. இந்தப் பணியில் பங்கு கொண்டு கும்பாபிஷேகம் சிறப்புற நடைபெறுவதற்கு எல்லா வகையாலும் பொருள் தந்த - பணியாற்றிய பேரன்பர்களுக்கும், சிவகெங்கை தேவஸ்தானத்தார்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக. இந்தப் பணியில் ஈடுபட்டு தொண்டுசெய்யும் பேற்றை அருளிய திருமுடித் தழும்பர் உமையாம்பிகையின் திருவடிகளை மனம், மொழி, மெய்களால் வணங்குகின்றோம்.

இங்ஙனம்,

*பெரி. வீர. ராம. பெரியணஞ் செட்டியார்*
*பெரி. அரு. வீரப்ப செட்டியார்*
*மு. வினைதீர்த்தான் செட்டியார்*
*அரு. உ. வீர. அழகப்ப செட்டியார்*
*சுப. நாராயணன்*
*மு. வீர. சிதம்பரம் செட்டியார்*
*பெரி. சித. ராமசாமி செட்டியார்.*

கும்பாபிஷேகக் குழுவினர்.

புதுவயல்
விகாரி ஆண்டு
தைத்திங்கள்
உ௰அ-ம் நாள்




வேதியர் வடிவில் வீரசேகரர், வீரன், சுமதி.

ஓம்

# வீரவனம்

என்னும்

# சாக்கை வரலாறு

## இன்னிசைப் பாடல்கள்

இயற்றியவர்

**சங்கீதம் SP. வீரப்பா அவர்கள்**

புதுவயல்

10-2-1960

இப்பாடல்கள்

நடிகர்

**திரு. T. S. மணிமுத்து பாகவதரால்**

தக்க பக்க வாத்தியங்களுடன்

விகாரி ஆண்டு, தைத் திங்கள் 28-ஆம் நாள்

இசையரங்கேற்றப் பெற்றன.

30/1

ஓம்.

# விநாயகர் துதி

இராகம் : கேதாரம்          தாளம் : ஆதி

## பல்லவி

அருள் பெறுவோம் வாரீர் அளகை விநாயகன்
திருவடித் தாமரை தினமும் துதி செய்து
(அருள்)

## அநுபல்லவி

குருமணி சிவன் உமை கொஞ்சிடும் திருமகன்
முருகனின் மூத்தோன் முன் நின்று காப்பான்
(அருள்)

## சரணம்

நிறை கருணை நிதி நெஞ்சில் நினைப் போரின்
குறை தீர்ப்பான் அவர் குடிகாப்பான் என்றும்-இத்
தரை மீதில் அவனைத் தஞ்சம் புகுந் தோர்க்கு
வரை யறையின்றி அருள் வாரி வழங்கும் வள்ளல்.
(அருள்)

ஓம்.

# வீரசேகரர் துதி

இராகம் : வாசஸ்பதி தாளம் : ஆதி

### பல்லவி

சந்திரனை முடி சூடும் சாக்கை வளர் ஈசனை
சிந்தை கனிந்துருகிச் சீரடி பணி நெஞ்சே
(சந்திரனை)

### அநுபல்லவி

சுந்தரத் தழும்பன் அருள் சூழ்ந்த கருணை நிதி
செந்திருமால் குபேரன் சேவடி போற்றிய
(சந்திரன்)

### சரணம்

சைவ நெறி முதல்வன் சைவாகமக் குரவன்
சொற் றொடர்க் கெட்டாத சொரூபன் ஆத்மநாதன்
சோதிச் சுடர் ஒளி சோர்விலாப் பரம்பொருள்
சௌந்தரனை வணங்கி சௌபாக்யம் பெறவே.
(சந்திரனை)

---

முதல்வன் - கடவுள் குரவன் - ஆசிரியன்
சௌந்தரன் - சிவன்

ஓம்.

## உமையவள் துதி

இராகம் : ஆரபி        தாளம் : ஆதி

### பல்லவி

அன்னை உமையவள்        ஆண்டருள்வாள் நெஞ்சே
இன்பமும் நல்வாழ்வும்        ஈந்திடும் செல்வி
(அன்னை)

### அநுபல்லவி

உன்னடி சதமம்மா        ஊழ்வினை அணுகாமல்
என்னை நீ காப்பாற்றி        ஏற்றருள் தா யென்றால்
(அன்னை)

### சரணம்

ஐமுகன் பாரி        ஐமவதி பாதம்
ஒன்றிய மனதுடன்        ஒரு கணம் நினைத்தால்
ஓடிவந்து காப்பாள்        ஓங்காரி உமை
ஔதாரி என்றும்        ஔலியர் கலி தீர்ப்பாள்.
(அன்னை)

---

ஐமுகன் - சிவன்        ஐமவதி - பார்வதி
ஔதாரி - மிகுகொடையாளி        ஔலியர் - பக்தர்கள்

ஓம்.

# முருகன் துதி

இராகம் : ஷண்முகப்பிரியா தாளம் : ஆதி

பல்லவி

கருணை முருகன் கார்த்தி கேயன்
கிருபை பெற அவன் கீர்த்தி பாடு மனமே
(கருணை)

அநுபல்லவி

குருபரன் தில்லைக் கூத்தன் மகன் அசுரர்
செருவமகற்றித் தேவர் கேடகற்றிய பெம்மான்
(கருணை)

சரணம்

கை தனில் வேல் சேவற் கொடி பிடித்து நீலக்
கோலமயில் வாயில் கௌவும் பாம்புடனே-இக்
கலியுக தெய்வமாய் காட்சிதரும் செல்வன்
கிலிதீர்ப்பான் அவனைக் கீழ்ப் படிந்து வணங்கு.
(கருணை)

## உய்யவந்தாள் துதி.

இராகம் : கேதாரகௌளை தாளம் : ஆதி

### பல்லவி

உய்யவந்தாள் இந்த உலகைக் காக்க வந்தாள்
மெய்ய அன்பு பூண்டோர்க்கு மிகு கருணை புரிந்து
(உய்ய)

### அநுபல்லவி

துய்ய திருவடியே துணை என
நினைப்போர்க்கு
கைமேல் பலன் ஈந்து காக்கும் பராசக்தி
(உய்ய)

### சரணம்

நகரில் துயர் பிணிகள் நாட விடமாட்டாள்
சுகமுடன் மக்கள் வாழ சூழ்ந்து கண்நோக்குவாள்
இகபர அருள் தருவாள் இன்னல்களைத் தீர்ப்பாள்
புகழ்ந்து பொன்னடி போற்ற புதுமைகள் பல செய்வாள்
(உய்ய)

## காப்பு

இராகம்: சுத்தசாவேரி                                    தாளம்: ஆதி

### பல்லவி

அளகை விஞயகன் அருள் செய்யவே சாக்கை
வளர்ந்த சரிதங்கூறி வாழ்த்தி வணங்குவோம்
(அளகை)

### அநுபல்லவி

வளமான செந்தமிழ் வாக்கில் நின்று மிளிர
விளக்கம் சொற்பொருள் நயம் வெற்றி இசை முழங்க
(அளகை)

### சரணம்

வீரசேகரன் திரு விளையாடல் கேட்டு
பூரித்துப் பரவசம் பொங்க மனமகிழ்ந்து
சீரடி தினம் தொழுது சிந்தை கனிந்துருகி
பாரில் சௌபாக்கியம் பெற்று பன்னுள் வாழ்கவே.
(அளகை)

# அருளின் தோற்றம்

இராகம் : ஹம்ஸத்வனி தாளம் : ஆதி

### பல்லவி

அடவிசூழ் அளகை அருகே சுமதி வீரன்
கடமை தவருமல் கான் பொருள்
தேடிவாழ்ந்தார்
(அட)

### அநுபல்லவி

மடமங்கை இல்லம் நிற்க மதி மிகும் நாய் தொடர
கடப்பாரை கையில் கொண்டு காய் கனி கொய்யச்
சென்ருன்
(அட)

### சரணம்

வனத்தில் வீரைத் தரு வளர்ந் தோங்க
வள்ளிக்கொடி
முனைந்து அதில் படர்ந்து முதிர்ந்து செழிக்கக்
கண்டான்
கனத்த ஆயுதம் கொண்டு கல்லச் சோரி பொங்க
மனத்தெம்பு குன்றி மண்ணில் மயங்கிக்கீழே வீழ்ந்தான்
(அட)

# காட்டில் கண்ட கடவுள்

இராகம்: பைரவி தாளம்: ஆதி

### பல்லவி

சுணங்கன் ஓடிச்சென்று சுமதியிடம் குரைக்க
கணவனைக் காணுமல் காரிகை துடித்தழுதாள்
(சுண)

### அநுபல்லவி

தணல் மிதிபட்டவள் போல் தவிக்க நாய் வழிகாட்ட
பிணம் போல் நாதன்கிடக்கப் பேரிடி வீழ்ந்தாளாளுள் ள்
(சுண)

### சரணம்

வீரை மரப் புற்றில் விளங்கும் கிழங்கு கண்டாள்
நீரென இரத்தம் சிந்தும் நிமலன் முடியைக்கண்டாள்
பீரிடும் செந்நீர் நிற்க பெண் செய்முயற்சி தோற்க
வீறிட்டலறி ஈசா விடுவேன் உயிரை என்ருள்
(சுண)

---

சுணங்கள்: நாய்.

# இறைவனிடம் இரக்கம்

இராகம்: கர்நாடக தேவகாந்தாரி தாளம்: ஆதி

## பல்லவி

அருள்செய்இறைவன் மங்கை அன்புக் கிரங்கி விட்டான்
குருதி நிறுத்தி விட்டான் குலமகள் போற்றக்
கண்டான்
(அருள்)

## அநுபல்லவி

அருமைக் கணவன் எழ அவள் வேண்ட ஆசி
செய்தான்
பெருமானை வீரனுக்கு பேதை சுட்டிக்காட்டினள்
(அருள்)

## சரணம்

கண்டான் சிவ வடிவை கண்களில் நீர் சிந்தினன்
அண்டர் பிரான் முடியில் ஆயுதம் கொண்டு தாக்கி
புண்படச் செய்த பிழை பொறுத்திட வேண்டு
மென்று
தெண்டனிட்டுச் சிவன் திருவடிதனில் வீழ்ந்தான்
(அருள்)

## பெயர் கூறிய பெம்மான்

இராகம் : மோகனம் தாளம் : ஆதி

### பல்லவி

இறைவன் மனம் கனிந்தான் ஈடேற்ற எண்ணம்
கொண்டான்
மறையோன் வடிவில் தோன்றி மகிழ்ந்திது
கூறலானுன்
(இறை)

### அநுபல்லவி

'திருமுடித்தழும்பர்' என்றும் திரு 'வீரசேகரர்'
என்றும்
அறைகுவீர் என் பெயரை ஆட் கொண்டருள்வேன்
என்ருன்
(இறை)

### சரணம்

'வடகீழ் எல்லே தனில் வாம பாகத்து உமை
மடக் கொடி இருக்கின்ருள் மகிழ்ந் தெடுத்து
எனது
இடப் பாகம் நிலே நாட்டு இன்னருள் புரிவோ'
மென்று
திடமுடன் கூறி லிங்கத் திருவடிவுள்
மறைந்தான்
(இறை)

## பிணி நீக்கும் பதி

இராகம்: பந்துவராளி தாளம்: ஆதி

பல்லவி

பொன்குலக் 'கண்ட சோழன்' பூம்புகார் நகராண்டான்
முன் வினையால் குட்டம் முதிர்வுற மனம்
நொந்தான்
(பொன்)

அநுபல்லவி

மன்னவன் மந்திரி மார் மதி கூறி சிவத்தலங்கள்
சென்று வணங்க நோயும் சின்னாளில் தீருமென்றார்
(பொன்)

சரணம்

பல தலங்கள் சென்று பணிந்து நகர் திரும்ப
விலகாத நோய் கண்டு விதிதனை மிக நொந்தான்
சிலதினம் பாண்டிநகர் சிவத்தலம் சென்று
வந்தால்
நலம் பெறுவீர் என்று நல்லமைச்சர்
மொழிந்தார்.
(பொன்)

---

பொன் - சூரியன்.

## கனவில் தோன்றிய கடவுள்

இராகம் : கானடா தாளம் : ரூபகம்

### பல்லவி

பாண்டி நாட்டுச் சிவபிரானைப் பணிந்து பிணியின்
கொடுமை தீர்க்க
வேண்டுதல்கள் செய்ய எண்ணி விரைந்து மகிழ்ந்து
சோழன் சென்றான்
(பாண்)

### அநுபல்லவி

நீண்டதூரம் வந்த சோழன் நிழல் நிறைந்த
சோலை கண்டு
ஆண்டருளும் வீரை நாதன் அருகே தங்கி
வாழ்ந்து வந்தான்
(பாண்)

### சரணம்

அளகை ஈசன் உமைக்கும் நல்ல ஆலயங்கள் இல்லை
என்று
உளம் வருந்தி வீரன் நெஞ்சம் உருக இறைவன்
கனவில் தோன்றி
வளரும் வீரைக்காடு தங்கி வாழும் சோழன்
வருந்தும் நோய்க்கு
அளவிலாத கருணை செய்து ஆள்வோமென்
றழைக்கச்
சொன்னான்
(பாண்)

# சிவநாமம் கேட்ட செவி நலம்

இராகம் : சிந்துபைரவி　　　　தாளம் : ஆதி

பல்லவி

கண்டு மகிழ்ந்து சோழன் காலில் வீழ்ந்தான் வீரன்
பண்டு செய்த தவத்தின் பயன் பெறுவீர் என்று
(கண்)

அநுபல்லவி

உண்டொரு தெய்வம் இங்கே உய்விக்கும் உமை பாகன்
கொண்டாடுவோர் மனத்தின் குறை தீர்க்கும் தெய்வம் என்ருன்
(கண்)

சரணம்

செய்திகேட்டான் சோழன் சிதைந்தது காதின் குட்டம்
கையில் கண்ணுடி கொண்டு காதினை நோக்கினுன்
ஐயனே என்றெழுந்தான் அகன்றது காலின்குட்டம்
கை கூப்பித் தொழுதான் கரைந்தது கரத்தின் குட்டம்
(கண்)

## அணைத்திடப் பறந்தநோய்

இராகம் : செஞ்சுருட்டி　　　　　　　　தாளம் : ஆதி

### பல்லவி

ஓடி வந்தான் சோழன்　　ஓம் வீர சேகரா வென்
ருடினுன் பாடினுன்　　ஆனந்தத்தால் அளகை
(ஓடி)

### அநுபல்லவி

கோடி புண்ணிய நிதி　　கொடுக்கும் கொடை
வள்ளலே
நாடி வந்தேன் உன்னை　　நல்லருள் செய் என்ருன்
(ஓடி)

### சரணம்

கட்டியணைத்துச் சிவன்　　கழல் பணிந்தான் சோழன்
குட்ட நோய் பறந்தது　　குதூகலம் கொண்டான்
கட்டினுன் கோயில் சிவன் காட்டிய மலர்க் கோட்டில்
வெட்டினுன் சோழா குளம் வியந்தான் சிவன் செயலை
(ஓடி)

# குழந்தை கொடுத்த குலதெய்வம்

இராகம் : பிருந்தா தாளம் : ஆதி

பல்லவி

தங்கினன் அளகையில் தவங்கிடந்தான் சோழன்
மங்களப் புதல்வனை மகிழ்ந்தருள் ஈசா என்று
(தங்)

அநுபல்லவி

பங்கு கொள் உமைக்கு பரிந்து மா விளக்கேற்றி
எங்கள் குலக் கொழுந்தை ஈந்தருள் தாயே என்று
(தங்)

சரணம்

பத்து மாதங்கள் செல்ல பத்தினி சுசீலையாள்
புத்திரனைப் பெற்றாள் புகழ்ந்தனர் இறைவனை
அத்திரு மகனுக்கு ஆண்டவன் பெயர் சூட்டி
சித்தம் கனிந்து வீர சேகரா என்றழைத்தார்.
(தங்)

## பிரிந்திடாப் பேரன்பு

இராகம்: தன்யாசி　　　　　தாளம்: ஆதி

### பல்லவி

அரசனை நாடு செல்ல அழைத்தனர் அமைச்சர்
வரமறுத்தான் சாக்கை வாழ்ந்திடத் துணிந்தான்
(அரசனை)

### அநுபல்லவி

பரந்த வானில் நின்று பகர்ந்தது அசரீரி
பிரிந்து செல் இன்று நீ பின்பு வா என்றது
(அரசனை)

### சரணம்

சித்திரை தோறும் சாக்கை சிவனை நீ தெரிசித்தால்
முத்தி பெறலாம் ஆண்டு முழுதும் பணிந்த பலன்
அத்திரு நாளில் விழா அபிடேகம் செய் என்று
அத்தனே கூறு வதாய் அறிந்து மகிழ்ந்து ஏற்ருன்
(அரசனை)

## கொடு நோய்க்குக் குணந்தேடல்

இராகம் : ஹிந்தோளம் தாளம் : ஆதி

பல்லவி

மதுரை இராமேச்சுரம் மதிசூடும் இறைவனை
துதி செய்யவே சோழன் துரிதமாய் சென்றான்
(மதுரை)

அநுபல்லவி

அதுசமயம் பாண்டியன் அதிதியாய் தங்கினான்
அதிசயம் செய்யும் சாக்கை ஆண்டவனைப் புகழ்ந்தான்
(மதுரை)

சரணம்

மிகு அவஸ்தைப்படும் மீளா வயிற்று நோய்க்கு
சுகுணபாண்டியன் சென்று சுகம் பெற எண்ணினான்
தகுதிநிறை அளகை தங்கும் சிவபிரானை
புகழ்ந்து பயன் பெறவே புறப்படுவேன் என்றான்.
(மதுரை)

## மகனுக்கு மணிமுடி

இராகம் : கௌரிமனோகரி தாளம் : கண்டம்

### பல்லவி

தன் நகர்க்கு வந்த சோழன் தங்கிப் பன்னாள்
அரசாண்டான்
மன்னன் மகன் சோழனுக்கு மணி மகுடம் சூட்டி
விட்டான்
(தன்)

### அநுபல்லவி

முன்னம் பிணிதீர்த்த சிவ மூர்த்திதனைக் காண
வேண்டி
வன்ன வீரைத் திருக்கோயில் வந்தடைந்தான்
அரசியுடன்
(தன்)

### சரணம்

உமை வீரசேகரரை உளம் கனிந்து மன
மகிழ்ந்து
எமைக் காக்கும் குல தெய்வமே என்று புகழ்ந்தேத்
தினார்கள்
தமை மறந்து பல்லாண்டு தாள் பணிந்து
சிலநாளில்
இமையவர் கோன் இணையடிக்கே இன்னுயிரை
அர்ப்பணித்தார்
(தன்)

# வீரனின் பரகதி

## கண்ணிகள்

இராகம்: ஜோன்புரி தாளம்: ஆதி

பல்லவி

சுமதியும் வீரனும் சுகமுடன் வாழ்ந்தார்
அமைதி கொண்டார் சாக்கை ஆண்டவனைத் துதித்தார்
(சுமதியும்)

அநுபல்லவி

1 தமை மறந்தார் தெய்வத் தன்மையை உணர்ந்தார்
உமை வீர சேகரரை உளம் கனிந்துருகினர்
(சுமதியும்)

2 பலமுறை பக்தியினல் பரவசம் கொண்டார்
சிலதினம் சென்றது சிவபதம் அடைந்தார்.
(சுமதியும்)

## ஐயத்தின் அகந்தை

இராகம்: சிம்மேந்திரமத்திமம் தாளம்: ஆதி

பல்லவி

பாண்டியன் பிணிநீக்கும் பதி அடைந்தான் (சுகுண) அளகை
ஆண்டவன் சந்நிதிமுன் அகந்தை கொண்டு நின்றான்
(பாண்டியன்)

அநுபல்லவி

வேண்டுவார் கலிதீர்க்கும் வீரை யென்றான் (சோழன்) சக்தி
தாண்டவம் ஆடும் என்றான் தகுமோ என ஐயுற்றான்
(பாண்டியன்)

சரணம்

முதன்முறை வலம் வந்தான் முதிர்ந்த வீரைத் தருவில்
இதழ் பூ காய் கனி இருக்கும் அழகு கண்டான்
புதியதோர் அதிசயம் புலப்படுமே யானல்
சதமென சிவன் பாதம் சரண்புகுவேனென்றான்.
(பாண்டியன்)

# வீரை பலாவான விந்தை

இராகம் : சங்கராபரணம் தாளம் : ஆதி

பல்லவி

இரண்டாமுறை பாண்டியன் ஈசனை வலம் வந்தான்
மிரண்ட பார்வை கொண்டான் மிகு மணம் வீசு
தென்றான்
(இரண்டாமுறை)

அநுபல்லவி

மறந்தோம் பலாக் கனியின் மரத்தினைக் காண
வென்றான்
சிறந்த மணம் வீசுதே சிவன் செயலோ
என்றான்
(இரண்டாமுறை)

சரணம்

வீரை மரத்தைக் காண விரும்பி நோக்கினான்
அங்கே
பூரித்துக் கனி குலுங்கும் புதிய பலாமரம்
கண்டான்
மாறிய மரம் காட்டி மதி தந்த சிவன் பாதம்
வீறிட்டலறி ஓடி வீழ்ந்தான் சரண
மென்றான்.
(இரண்டாமுறை)

## பாண்டியன் பக்தி ; பழத்தின் சக்தி

இராகம் : மனேலயம் தாளம் : ஆதி

பல்லவி

கை கொடுத்தாளும் கலியுக தெய்வம்
ஐயனே நீ என்று அறிந்திலேன் என்ருன்
(கை)

அநுபல்லவி

மெய்யை நம்பாமலே மிகவும் சோதனை செய்தேன்
துய்ய உன்புகழ் கண்டேன் துதிக்கின்றேன் என்ருன்
(கை)

சரணம்

சொல்லிய தசரீரி சுகுண பாண்டியா உன்
வல்ல வயிற்று நோயின் வலிதீரும் மருந்து
இல்லை யென்றெண்ணுதே இனிய பலாக்கனி உண்ணு
நல் சுகம் தருமென நவின்றது மகிழ்ந்தான்.
(கை)

## பலாவை மாற்றிய பரமன் விளையாட்டு

இராகம் : வலஜி | தாளம் : ஆதி

### பல்லவி

வீர சேகரன் பாதம் விரும்பித் துதித்தான் மனம்
பூரித்தான் பூசித்தான் புகழ்ந்தான் பாண்டியன்
(வீர)

### அநுபல்லவி

மாறிய பலா மரம் மறைந்திட அசரீரி
கூற வீரை மரம் குன்றென நின்றது
(வீர)

### சரணம்

அளகை நகர் தங்கி ஆண்டவன் பணிசெய்து
இளவல் பாண்டியன் இன்பமாய் வாழ்ந்தான்
அளவிலா நலமும் அறப்பணி பலவும்
தளர் வின்றிச் செய்தான் தனிப் புகழ் பெற்ருன்
(வீர)

## காசி ஆசை

இராகம் : பாகேஸ்வரி தாளம் : ஆதி

### பல்லவி

மங்கலம் என்ற ஊரில் மகிழ்ந்துறை வேளாளன்
தங்குலச்செல்வன்பெற தவங்கிடந்தான் பன்னுள்
(மங்கலம்)

### அநுபல்லவி

கங்கை நிறைகாசி செல்ல கைதனிற் பொருள் இன்றி
அங்கவன் இல்லம் நின்ற ஆவினம் விற்கலானுன்
(மங்கலம்)

### சரணம்

பத்து மாடு தானமாய்ப் பரிந்து வேதியன் ஏற்ருன்
அத்தனை மாடும் அவ்வூர் ஆட்டிடையன் வாங்கினுன்
மெத்த மகிழ்ந்து பாவ மீட்சி பெறுவே னென்று
அத்தினமே தீர்த்த யாத்திரை செல்லலானுன்
(மங்கலம்)

## பேராசைப் பேயன்

இராகம்: குந்தலவராளி தாளம்: ஆதி

பல்லவி

வேதியன் மாடுமேய்ந்து வீடு திரும்பாமல்
யாதவன் மாட்டுடனே அவைகள் இருக்கக்
கண்டான்
(வேதியன்)

அநுபல்லவி

தாதை ஒருவன் ஈந்த தன் பசு தரவேண்ட
சேதி கேட்ட இடையன் சீட்டினைக் காட்டென்ருன்
(வேதியன்)

சரணம்

மயங்கினுன் அந்தணன் மனமிக வருந்தினுன்
தயங்காமல் ஊராரிடம் தன் வழக்கை உரைத்தான்
பயமின்றி இடையனும் பசுவெல்லாம்
தனதென்ருன்
துயர்கொண்டு பாண்டியன் துணை நாடினுன்
மறையோன்.
(வேதியன்)

## நீதியை நிலைநாட்டும் நீர்

இராகம்: ஆபோகி　　　　　　　　　　தாளம்: ஆதி

பல்லவி

இடையனும் வேதியனும் இறைவனுறை சாக்கை
அடைந்து பாண்டியன்முன் ஆவின் வழக்குரைத்தார்
(இடையனும்)

அநுபல்லவி

விடையேறும் இறைவன் வீரசேகரர் முன்னே
தடையின்றியே சத்தியம் தருவீரோ எனக் கேட்டான்
(இடையனும்)

சரணம்

யாதவன் மொழிந்தான் அந்தணன் இசைந்தால்
வாது செய்யேன் என்றான் வந்தனர் ஈசன் முன்
தீதற அசரீரி திருக்குளம் மூழ்கி எழ
சூது புலனாகும் சுகுணா என்றது.
(இடையனும்)

## தீர்த்தத்தின் கீர்த்தி

இராகம் : கமாஸ் தாளம் : ஆதி

பல்லவி

வந்தனர் சோழா குளம் வாய்மையை நிலை நாட்ட
அந்தணனை முன்னே அரசன் மூழ்கச்
சொன்னான்
(வந்தனர்)

அநுபல்லவி

முந்தி ஈசனைப் போற்றி மூழ்கினான் அந்தணன்
சுந்தரமும் இளமைச் சுடர் வீச வெளிவந்தான்
(வந்தனர்)

சரணம்

அடுத்து இடையன் நீரில் ஆழ்ந் தெழுந்தான்
கண்ணைக்
கெடுத்து விட்டான் இறைவன் கேடனை அறிந்தனர்
படுத்தடி செய்து பெற்ற பசுவைத் தருவேன் ஈசா
கொடுத்திடு கண்ணை என்று கோவெனக் கதறி
நின்றான்
(வந்தனர்)

## கண் கொடுத்த கடவுள்

இராகம்: கல்யாணி    தாளம்: ஆதி

பல்லவி

கண் கொடுக்கும் தெய்வம் கருணைத் தெய்வம்
அளகை
அண்டினோர்க் கெல்லாம் அபயம் கொடுக்கும்
தெய்வம்
(கண்)

அநுபல்லவி

புண்பட்டழுதலறிப் புலம்பும் இடையனுக்கு
தண்ணருள் சுரக்க எண்ணி தயை செய்த வீரைத்
தெய்வம்
(கண்)

சரணம்

பாண்டியன் திகைக்க வானில் பகர்ந்தது அசரீரி
மீண்டும் மூழ்கி எழ மின்னிடும் கண் என்றது
ஆண்டவன் கட்டளை போல் ஆழ்ந் தெழுந்தான்
இடையன்
வேண்டும் கண் ஒளிபெற்றான் வியந்தார் சிவன் செயலை.
(கண்)

## சர்வமங்கள தீர்த்தம்

இராகம் : ஸஹாரு தாளம் : ஆதி

### பல்லவி

அத்தின முதல் தீர்த்தத்தை அசரீரி வாக்கினல்
சத்திய தீர்த்த மென்று சகலரும் கொண்டாடினர்
(அத்தின)

### அநுபல்லவி

முத்தியளிக்கும் தீர்த்தம் மூப்பை அகற்றும் தீர்த்தம்
சுத்தி கொடுக்கும் தீர்த்தம் சர்வமங்கள தீர்த்தம்
(அத்தின)

### சரணம்

குளத்தில் தினம் மூழ்கி கோயில் வலம் வந்து மா
விளக்கேற்றி உமைத்தாயே வீரசேகரா (என்ருல்)
என்று

களங்க மறத் துதித்துக் காப்பாற்ற வேண்டு
மென்ருல்

அளக்க முடியாது அவர் தரும் அருள்
அன்பு
(அத்தின)

## வளர்நிதி அருளும் வள்ளல்

இராகம் : ஹம்ஸானந்தி தாளம் : ஆதி

### பல்லவி

வளர் நிதியும் அருள் வாழ்வும் தா என்று
அளகைக் குபேரன் ஆண்டவனைக் கேட்டான்
(வளர்)

### அநுபல்லவி

இளமதி சூடிய இறைவன் சாக்கை சென்று
தளர்வின்றி நூருண்டு தவம்செய் தருவோ மென்ருன்
(வளர்)

### சரணம்

ஆண்டொரு நூறு சாக்கை ஆழ்ந்து தவம் கிடந்தான்
வேண்டுவார்க் கருளும் வீரசேகரன் கண்டான்
நீண்ட செல்வமும் என்னை நீங்காத பேரன்பும்
பூண்டுவாழ் அளகை பொருந்தும் இன்னகர்க் கென்ருன்
(வளர்)

# அருள் தரும் அளகை கண்ணிகள்

இராகம் : சிந்துபைரவி தாளம்; ஆதி

பல்லவி

குன்று நிகர் நிதியைக் குபேரன் பெற்றதனுல்
நன்று தான் வாழ்கின்ற நகரின் பெயர்
சூட்டினுன்
(குன்று)

அநுபல்லவி

1 அன்று முதல் சாக்கை அளகை என்ற
பெயரால்
தொன்று தொட்டு வழங்கத் தோத்தரித்து
மகிழ்ந்தார்
(குன்று)

2 என்றும் இத்திருக்கோயில் இறைவனைப்
பணிவோர்கள்
பொன்னும்பொருளும்பெற்றுப் புகழுடன்
வாழ்வார்கள்.
(குன்று)

## வீரம் ஈந்த வீரை ஈசன்

இராகம் : காப்பி　　　　தாளம் : ஆதி

பல்லவி

பத்தவதாரம் கொண்ட　பரந்தாமன் சாக்கை வந்து
சித்தம் களித்து வீர　சேகரனைத் தொழுதான்
(பத்தவதாரம்)

அநுபல்லவி

பித்தா பிறை சூடும்　பெம்மானே வெற்றி
கொள்ளும்
சுத்த வீரத் தன்மை　சூழ்க அருள் என்றான்
(பத்தவதாரம்)

சரணம்

வீரைச் சிவன் திருமால்　வேண்டும் வரம்
கொடுத்தான்
வீர ராகவப் பெயர்　விளங்கக் கோயில் கொண்டு
ஊரின் மேற்கே அமர்ந்து　உன்னடி தொழு வோர்க்கு
தீரமும் வீரமும்　தினம் கொடுத்தருள்
என்றான்
(பத்தவதாரம்)

# அளகை, பெருந்துறை ஆண்டவன் ஒன்றே

இராகம் : தோடி தாளம் : ஆதி

### பல்லவி

பொதி சோற்றை உண்பித்து புரவலன் புகழ்ந்தேற்ற
மதி சூடும் இறைவன் மறையோன் வடிவில்
வந்தான்
(பொதி)

### அநுபல்லவி

கெதி தரும் பெருந்துறைக் கேடர் நில வழக்கில்
சதி செய்தோர் தோல்வியுற சத்தியர் வெற்றி பெற
(பொதி)

### சரணம்

பகைவர் மண்வெட்டி கொண்டு பாலை நிலத்தை வெட்ட
மிகையான நீர் ஊற்று மேலெழ அருள் செய்து
சிகையில் வடுக் கொண்ட சிவனுய் அளகை
தோன்றி
தகைமை சால் துறையூர் தங்கி மறைவோ
மென்ருர்.
(பொதி)

## ஒளிபெற்ற விழி

இராகம் : வந்தனதாரிணி    தாளம் : ஆதி

பல்லவி

தெய்வமே இல்லையென்ற    திடமானபொய்யை நம்பும்
ஐயா சாக்கை நிகழ்ந்த    அதிசயம் ஒன்று கேள்
(தெய்வமே)

அநுபல்லவி

வையம் புகழ் தேவகோட்டை    வாழும் தனவணிகர்
மெய்யடியார் கண் கெடவே    மிகவும் துயர் கொண்டார்
(தெய்வமே)

சரணம்

வீரசேகரர் உமை    வீற்ற சாக்கை வந்தார்
நீராடி ஓர் மண்டலம்    நின்றூர் உமை முன்னே
தீராத நோய் தீர்க்கும்    தெய்வமே என் கண்ணைப்
பாராயோ எனக் கதறப்    பளீரென ஒளி பெற்றூர்
(தெய்வமே)

---

குறிப்பு :- கண்ணொளி பெற்றவர், தேவகோட்டை சொக்கலிங்கம் செட்டியாரின் குமாரர் இராமநாதன் செட்டியார் (அ. ராம. மு. ராம. சொ.)

# பொங்கும் மங்களம்

இராகம் : மத்தியமாவதி தாளம் : ஆதி

பல்லவி

மங்களம் பெறுவார் மாவீர சேகரரின்
சங்கீதப் பாடலின் சரித மிதைக் கேட்டோர்
(மங்களம்)

அநுபல்லவி

மங்கை உமையவளும் மாமுடித்தழும் பரும்
தங்கள் புகழ்பாடத் தயை புரிந்தருள்வார்
(மங்களம்)

சரணம்

கண்பெறுவார் நல்ல கதிபெறுவார் நெஞ்சில்
எண்ணிய காரியம் எல்லாம் முடிப்பார்
புண்ணிய ராவார் புகழுடன் வாழ்வார்
திண்ணமாய் உமை சிவன் திருவடி பணிவோர்.
(மங்களம்)

ஓம்

# வீரவனம்

என்னும்

# சாக்கை வரலாறு

உரைநடை

இயற்றியவர்

புலவர் முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்கள்

விரையாச்சிலை.

10-2-1960

உ
சிவமயம்

# சாக்கை வரலாறு

## தலப்பெயர் சுவாமி பெயர் முதலிய விபரம்.

இத்தலம் வில்வாரணியம், வீராரணியம், வீரை, வீரையூர், வீரவனம், அளகை, சாக்கோட்டை, சாக்களூர் சாக்கை என பல பெயர் பெற்று விளங்கும். இங்குள்ள விநாயகப் பெருமான் அழகு மிக்கவர். அவருக்கு அழகு விநாயகர், சுந்தர விநாயகர் என்றும் பெயர்கள் உண்டு. சுவாமியின் திருநாமம் வீரசேகர நாதர்; திருமுடித்தழும்பர் என்னும் சிறப்புப் பெயராலும் அவர் அழைக்கப்படுவார். அம்பிகைக்கு உமையாம்பிகை, உமாம்பிகை உமையாண்டாள், உமையவள் என்னும் திருநாமங்கள் உண்டு. இத்தலத்திற்குரிய விருட்சம் வீரைமரமாகும். இங்குள்ள தீர்த்தம் மிக மகிமை வாய்ந்தது. சிவ கெங்கை சோழ தீர்த்தம் சத்திய புட்கரணி என்று அந்த தீர்த்தத்திற்குப் பெயர் வழங்கப்பெறும்.

## வீரசேகரர் திருமுடித் தழும்புற்ற நிகழ்ச்சி

முன் ஒரு காலத்தில் வீரன் என்னும் பெயருடைய வேடுவன் ஒருவன் இருந்தான். ஒருநாள் மிகவும் அருமையாக வளர்த்த நாய் ஒன்றைத் தன்னுடன் கூட்டிக்கொண்டு அவன் வீரவனத்திற்குச் சென்றான். அங்கு வீரைமரத்தின் அடியில் இருந்த புற்றின்மீது ஒரு பெரிய வள்ளிக் கொடி அடர்ந்து படர்ந்திருந்ததைக் கண்டான். மிகுந்த கிழங்கு இருக்கும் என்று கருதி ஆவலோடு கூரிய இரும்புக் கருவியால் புற்றைத் தோண்டினன். சிறிது அழுந்தித் தோண்டியதும் புற்றுக்குள்

ளிருந்து, சரே லென்று இரத்தம் பீரிட்டு அடித்தது. எதிர்பாராத இந்த நிகழ்ச்சியால் வீரன் துணுக்குற்று மூர்ச்சித்துக் கீழே விழுந்தான்.

எசமானன் மயக்கமுற்று வீழ்ந்ததைக் கண்ட நாய் பதைபதைப்போடு விரைந்து அவன் மனைவியாகிய சுமதி இருக்குமிடத்திற்கு ஓடிற்று. நாயின் பதைபதைப்பைக் கண்ட சுமதி கணவனுக்கு ஏதோ ஆபத்து நிகழ்ந்திருக்கிறது என்று குறிப்பால் அறிந்து, நாய் வழிகாட்ட மிகுந்த கலக்கத்தோடு வீரவனத்திற்கு வந்தாள். அவள் வந்து பார்க்கும்பொழுது வீரனுக்குச் சுவாசம் ஓடிக் கொண்டிருந்தது. எனவே அவன் இறக்கவில்லை என்பதை அவள் தெரிந்து கொண்டு எதனுல் இது நேர்ந்திருக்கும் என்பதை அறிவோமென்று மரத்தின் அடியிலுள்ள புற்றைத் தோண்டிப் பார்த்தாள். என்ன ஆச்சரியம்! உள்ளே ஒரு சிவலிங்கம் இருந்தது. அதன் தலையிலிருந்து இரத்தம் வடிந்து கொண்டிருப்பதை அவள் கண்டாள். சிவபெருமான் திருமுடியில் ஆயுதம் பட்டதாலேயே இரத்தம் சுரந்து வெளிவருகின்றதென்பதை உணர்ந்து கொண்ட அவள் தவறு நிகழ்ந்து விட்டதே என மனம் நெகிழ்ந்து, 'எம்பெருமானே உன் தலையினின்று ஒழுகும் இரத்தப் பெருக்கை இப்பொழுதே நிறுத்த வேண்டும். இல்லையேல் நான் உயிரை விட்டு விடுவேன் என் நாயகன் அறியாமற் செய்த பிழையைப் பொறுத்து உயிர்ப் பிச்சை வழங்க வேண்டும். நாங்கள் வழி வழி அடிமையாய் உனக்குத் தொண்டு செய்வோம்' என்று இறைஞ்சினுள். சிவபெருமான் திருமுடியிலிருந்து வந்த இரத்தப் பெருக்கு நின்றது. வீரனும் மூர்ச்சை தெளிந்து எழுந்தான். அவனும் அவன் மனைவியும் சிவலிங்கத்தின் முன்னிலையில் அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கினர். அப்பொழுது வீரன் மனத்தில்

ஆண்டவன் தலையில் ஒரு தழும்பு ஏற்படச் செய்து விட்டோமே என்னும் வருத்தம் மிகுந்திருப்பதை அறிந்த சிவபெருமான் ஒரு பிராமணர் வடிவில் அவன் முன் தோன்றிப் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளினர். "வீரன் என்னும் அடியவனே! நீயும் உன் மனைவியும் இதனைக் கேட்பீர்களாக, பாவகரமான ஒரு செயலைச் செய்து விட்டோமே என்று கவலைப்பட வேண்டாம். இப்படித் தழும்பு பெறுவது எமக்கு முதல் தடவை அன்று. ஏற்கனவே பிட்டுவாணிச்சிக்காக மண் சுமக்கப் போய் பாண்டிய அரசனுல் பிரம்படித் தழும்பும், பாசுபதம் பெற வந்த அர்ச்சுனனுல் வில்லடித் தழும்பும், சாக்கிய ஞல் கல்லடித் தழும்பும், கண்ணப்பனுல் செருப்படித் தழும்பும் பெற்று நன்கு பழகிப்போயிருக்கிருேம். இவை எல்லாம் எமக்குத் திருவிளையாட்டாகும். நாம் பூமிக்குள்ளிருந்து வெளிப்பட்டு இந்த வீரை மரத்தின் அடியில் இருப்பதால் இன்று முதல் வீரசேகரர் என்னும் திருநாமமும், உன்னுல் தலையில் தழும்பு பெற்றதால் திருமுடித் தழும்பர் என்னும் சிறப்புப் பெயரும் பூண்டு இங்கு வீற்றிருந்தருளி இந்த நாமங்கள் இரண்டையும் சொன்னவர்களுக்கு இம்மையில் எல்லாச் செல்வங்களையும், மறுமையில் முக்திப் பேற்றையும் அளித்து வருவோம். இந்த வீரைமரத்திற்கு வடகிழக்குத் திசையில் உமையாண்டாள் வீற்றிருக்கின்ருள். அவளையும் எம்மையும் நீங்கள் இருவரும் வழிபட்டு உய்வீர்களாக."

இங்ஙனம் கூறியருளிச் சுவாமி சிவலிங்கத்தினுள் மறைந்தார். அவர் தெரிவித்தபடி வடகிழக்குத் திசையில் உமையாண்டாள் வீற்றிருப்பதை வீரனும் சுமதியும் கண்டு ஆச்சரியமுற்றனர். அது முதல் இருவரும் நாள்தோறும் தவருமல் வீரவனம் வந்து வீரசேகரரையும் உமையாண்டாளையும் வழிபாடு செய்துவந்தனர்.

## சோழன் செய்த திருப்பணி

வீரசேகரப் பெருமானுக்குத் திருக்கோயில் ஒன்று கட்ட வேண்டுமென்று வீரனும் சுமதியும் விரும்பினுர்கள். ஆனுல் அவர்களிடம் பொருள் வசதியில்லை. என்ன செய்வோம் என்று மிகவும் மனம் வருந்தினுர்கள். அவர்கள் வருத்தத்தைப் போக்க வீரசேகரர் திருவுளம் கொண்டார். முன்னவனை முன்நின்ருல் முடியாத காரியம் உண்டோ?.

அப்பொழுது காவிரிப்பூம் பட்டணத்தில் கண்டன் என்னும் பெயருடைய சோழ அரசன் அரசு செலுத்தி வந்தான். அவன் குட்ட நோயால் பீடிக்கப்பட்டு அளவு கடந்து துன்பமுற்ருன். மருத்துவர்கள் செய்த சிகிச்சை யால் பயனில்லாமற் போகவே, சிவத்தலங்கள் தோறும் சென்று இறைவனை வழிபட்டு அந்நோயைப் போக்கிக் கொள்ள அமைச்சர்கள் அறிவுறுத்தினுர்கள். வட நாட்டில் உள்ள காசி, இந்திரநீல பருவதம், கேதாரம் முதலிய சிவத்தலங்களுக்கும், தென்னுட்டிலுள்ள திருக் காளத்தி, சிதம்பரம், சீர்காழி, திருவெண்ணை நல்லூர், திருப்பாதிரிப்புலியூர், திருவண்ணுமலை முதலிய பல சிவத் தலங்களுக்கும் சென்று வழிபட்டு வந்தும் நோய் ஒரு சிறிதும் குணமாகவில்லை. இதனுல் கவலையுற்ற அரசன் ‘இனி பாண்டியநாட்டுச் சிவத்தலங்களுக்குச் சென்று வணங்கிவருவோம். அதிலும் குணமாகாவிட்டால் உயிரை விட்டுவிடுவோம்’ எனத் தீர்மானித்துத் தன் பரிவாரங்களோடு புறப்பட்டான். திருப்பெருந்துறையை நோக்கி வரும்பொழுது வழியில் வீரவனத்திற்கு அருகே வந்து தங்கினுன். இந்த அருமையான சந்தர்ப்பத்தை வீரசேகரர் பயன் படுத்திக்கொள்ள விரும்பினுர்.

வீரனுடைய கனவில் தோன்றி "அன்பனே சோழ அரசன் தன் பரிவாரங்களோடு நம் எல்லையில் வந்து தங்கியிருக்கிறான். அவனிடம் போய் சொன்னால் நீ நினைத்தவாறு திருக்கோயில் கட்டலாம்" எனக்கூறி யருளினார். வீரன் விழித் தெழுந்து இறைவன் கருணை இது என்று புளகாங்கிதமுற்று மறுநாட் காலை சோழ அரசன் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றான். வீர சேகரநாதரைப் பற்றிய முழுவிபரங்களையும் அரசனிடம் எடுத்துரைத்தான். "வீரசேகரர்" என்னும் திருநாமம் சோழ அரசன் காதில் விழுந்ததுமே அவன் காதுகளில் இருந்த குட்டம் மறைந்தது. சென்று வணங்குவோம் என எழுந்தான். அவன் கால்களில் இருந்த குட்டம் நீங்கிற்று. வீரசேகரரைக் கைகூப்பி வணங்கினான். கைகளிலிருந்த குட்டம் விலகிற்று. பேரார்வத்தோடு சாக்கை வந்து சிவலிங்கத்தைக் கட்டித் தழுவினான். உடம்பில் இருந்த குட்டம் முழுவதும் பறந்தது. அப்புறம் சொல்லவும் வேண்டுமோ?

மிகப் பிரமாண்டமான திருக்கோயிலை நன்று கட்டும் திருப்பணியைச் சோழ அரசன் உடனே துவங்கினான். விரைவில் கோவிலைக்கட்டி முடித்து வீரசேகரர் திருவரு ளால் காட்டிய மலர்க் கோட்டில் மறைந்திருந்த சிவ கெங்கைத் தீர்த்தத்தையும் அழகுற அமைத்து சோழா குளமெனப் பெயர் சூட்டினான்.

சோழ அரசன் வீரசேகரர்க்குத் திருக்கோயில் அமைத்தபின் அவருக்கு வருடந்தோறும் திருவிழாக்கள் நடைபெறவும் ஏற்பாடு செய்தான். இத்தலத்திற்கு அருகே ஒரு திருநகரம் அமைத்தான்.

நகர மக்களோடு அரசனும் கூடஇருந்து வீரசேகரர் வழிபாட்டைப் பக்திசிரத்தையோடு செய்து வந்தான்.

அவன் மனைவியாகிய சுசீலை உமையாண்டாள் அம்பிகைக்கு வெள்ளிக்கிழமை தோறும் மாவிளக்கு ஏற்றிப் பூசை செய்துவந்தாள். நெடுநாள் பிள்ளைப் பேறு இல்லாமல் குறையுற்றிருந்த அவளுக்கு அம்பிகை யின் திருவருளால் கர்ப்ப முண்டாயிற்று. பத்து மாதம் கழிந்ததும் அவள் அழகுமிக்க ஓர் ஆண் மகவைப் பெற்ருள். அம்மகவுக்கு வீரசேகரச் சோழன் என்று சுவாமியின் திருநாமத்தையே பெயராகச்சூட்டி அரசனும் அரசியும் மகிழ்ந்தார்கள். இங்ஙனம் சிறிது நாட்கள் சென்றதும் மந்திரிகள் அரசனிடம் வந்து "ஐயனே! நீண்டநாட்கள்ஆகிவிட்டன. காவிரிப்பூம்பட்டினத்திற்கு எழுந்தருள வேண்டும்" என்று வேண்டினர். அரசன் கோவிலுக்குச் சென்று சுவாமியிடம் "எம்பெருமானே உன்னை நான் எப்படிப் பிரிந்து செல்வேன்?" என வருந்தி நின்ருன். அப்பொழுது சுவாமி அசரீரிவாக்காய் "அரசனே! நீ உன் தலைநகருக்குச் சென்று அரசு செலுத்தி வருவாயாக. வருடம் ஒருமுறை சித்திரை மாதம் இங்குவந்து திருவிழாக் கண்டு செல்வாயாக." எனக் கூறியருளினுர்.

சுவாமியின் ஆணைபெற்று, அரசன் தலைநகருக்குச் சென்ருன். வருடந்தோறும் சித்திரைமாத விழாவிற்கு வந்து சுவாமி தரிசனம் செய்துவந்தான். நாளடைவில் திருக்குமாரனுகிய வீரசேகரச் சோழனுக்கு முடிசூட்டி, அரசனும் அரசியும் வீரவனம் வந்திருந்து திருவடி நிழலைச் சேர்ந்தனர். அதன்பின் வீரனும் சுமதியும் சிவலோகப்பதவி அடைந்தனர்.

## வீரைமரம் பலாமரம் ஆகிய அற்புதம்

வீரசேகரர் திருவருள் புரிந்த நிகழ்ச்சியைச் சோழ அரசன் இராமேசுவரம் சென்று தலைநகர் திரும்பும்

வழியில் பாண்டிய அரசனாகிய சுகுண பாண்டியனிடம் சொல்ல, பாண்டியனுக்கு வீரவனம் வந்து சுவாமியைத் தரிசிக்க வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. அதுபோல் அவனும் வந்து தரிசித்தான். சோழ அரசன் சொன்னது உண்மையாக இருக்குமா? இந்தச் சிவலிங்கம் அவ்வளவு மகிமை வாய்ந்ததாக இருக்குமா? அப்படி இது மகிமை வாய்ந்ததாக இருக்குமானால், இந்த வீரை மரத்தைப் பலாமரமாக ஆக்கிக் காட்டட்டுமே பார்ப்போம் என்று பாண்டியன் தன் மனத்திற்குள்ளே எண்ணினான். அவ்வளவுதான் அந்தக் கணமே அங்கு நின்று கொண்டிருந்த தல விருட்சமாகிய வீரைமரம் பலாமரமாக மாறிப் பலாப் பழங்கள் நிறைந்து காட்சி அளித்தது. அதனைக்கண்ட பாண்டியன் "ஐயகோ, என்ன பிழை செய்தோம். ஆண்டவன் திருவருளில் சந்தேகம் கொண்டோமே எனப் பயந்து சுவாமியின் சந்நிதியில் விழுந்து வணங்கி "எம்பெருமானே அறியாமையால் இந்தச் சோதனையைச் செய்ய நினைத்தேன். பொறுத்தருள வேண்டும்" என வேண்டினான். அப்பொழுது சுவாமி "அரசனே வருந்தாதே நீ செய்த சோதனையால் உலக மக்கள் இன்னும் அதிகமான பக்தியோடு எம்மை வழிபட்டுய்வார்கள். இப் பலாமரத்திலுள்ள பழத்தை உண்டு உன் வயிற்று நோயைத் தீர்த்துக்கொள். இனி இது மீண்டும் வீரைமரமாகக் காட்சி அளிக்கும்" என அசரீரி வாக்காய்த் திருவாய் மலர்ந்தருளினார். அரசன் ஆவலோடு பலாக்கனியைப் பறித்து உண்டான். நெடு நாட்களாகத் தீராமல் அவனை வருத்தி வந்த வயிற்று வலி உடனே நீங்கிற்று. அங்கு நின்ற மக்களும் பலாக் கனிகளைப் பறித்து உண்டு உடல் நோயும், மன நோயும் நீங்கப்பெற்று மகிழ்ந்தார்கள். பலாமரமாக மாறி நின்ற தல விருட்சம் மீண்டும் வீரைமரமாக எப்பொழுதும் போல் காட்சி அளித்தது.

சுகுணபாண்டியன் உமையாண்டாளுக்குச் சொர்ணு பரணங்கள் பலசெய்து வைத்தான். திருக்கோவிலுக்குப் பல கிராமங்களை வழங்கி நித்திய நைமித்திகப் பணிகள் வழுவுருமல் நடைபெற ஏற்பாடுகள் செய்துவிட்டுப் பாண்டிய நாட்டுத் தலைநகராகிய மதுரையம்பதியை அடைந்தான்.

## வீரவனத்திற்கு அளகை என்னும் பெயர் வந்த காரணம்

குபேரன் என்ருல் மிகுதியான செல்வங்கள் படைத்தவன் என்று நாம் கூறுகிருேம். அதனுல்தான் கோடீச்வரர்களைக் குபேரர்கள் என்று வழங்குகிருேம். ஆனுல் குபேரன் எப்படிப் பெரிய செல்வத்திற்கு உரிய வனுனுன் என்னும் இரகசியம் அநேகருக்குத் தெரியாது. அந்த இரகசியத்தை இங்கே கூறுகின்ருேம்.

குபேரன் பெரிய செல்வவந்தனுக ஆக வேண்டு மென்று சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்தான். அவன் செய்த அரிய தவத்திற்கு இரங்கிச் சிவபெருமான் காட்சி அளித்து உனக்கு என்ன வரம் வேண்டும் எனக் கேட்டார். "ஆண்டவனே உன் திருவடி மறவாத சிந்தை யையும், பூலோகம் தேவலோகம் இரண்டிலும் உள்ள எல்லாரையும் விடப் பெருஞ் செல்வத்தையும் எனக்குத் தந்தருள வேண்டும்" எனக் குபேரன் வேண்டினுன். அதற்குச் சிவபெருமான் "திருவடிமறவாத சிந்தையை இப்பொழுதே உனக்குத் தருகின்ருேம். ஆனுல் யாரினும் பார்க்கப் பெருஞ் செல்வம் உனக்குக்கிட்ட வேண்டு மென்ருல் யாம் பூலோகத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவத்தலம் ஒன்றிற்கு நீ சென்று நூருண்டுகள் தவம் செய்யவேண்டும் அப்பொழுதுதான் அஃது உனக்குக்

கிட்டும்" என்று கூறியருளினர். குபேரன் மனமகிழ்து "எம்பெருமானே நான் தவம் செய்தற்குரிய சிறந்த சிவத்தலம் எது என்பதைந் தெரிவித்தால் அங்கே போய்த்தவம் செய்யச் சித்தமாயிருக்கிறேன்" என்ருன். "அன்பனே பூலோகத்தில் வீரவனம் என்னும் ஒரு சிவத்தலம் இருக்கிறது. எல்லாத் தலங்களினும் பார்க்க அஃதே மிகச் சிறந்த தலமாகும். அங்கு நீ சென்று தவம் செய்வாயாக" என இறைவன் திருவாய் மலர்ந் தருளினர். அதுபோல் குபேரன் வீரவனம் வந்து நூருண்டுகள் தவம் புரிந்து சிவபெருமானிடம் பெருநிதி பெற்றுத்தேவலோகம்சென்று அளகாபுரிப்பட்டணத்தை நிர்மாணித்தான். எனவே, குபேரனுக்குப் பெருஞ் செல்வம் அளித்த திருத்தலம் வீரவனம் என்னும் இரகசியம் இதிலிருந்து புலஞகும். இக்காரணத்தால் தான் குபேரன் நிர்மாணித்த அளகாபுரி பட்டணத்தின் பெய்ரையே தனக்கும் பெயராகக் கொண்டு வீரவனம் "அளகை" என்றும் அழைக்கப்பெறுகிறது.

## *சிவகெங்கை தீர்த்தம் - சத்தியத்திற்கு ஓர் உறைகல்*

மங்கலம் என்னும் ஊரில் ஒரு வேளாளன் இருந் தான். அவன் பிள்ளைப்பேறு வேண்டித் தன் மனைவி யோடு காசியாத்திரைக்குப் புறப்பட்டான். அப்பொழுது தன்னிடம் இருந்த பசுமாடுகளுள் பத்து மாடுகளை ஒரு பிராமணருக்குத் தானமாக வழங்கி, மீதமுள்ள மாடுகளை ஓர் இடையனுக்கு விற்றுவிட்டுச் சென்ருன். சில நாட்கள் சென்றதும் பிராமணரிடம் இருந்த மாடுகள் பழக்க வசத்தால் இடையனிடமிருந்த மாடுகளோடு சேர்ந்து இடையன் வீட்டிற்கு வந்துவிட்டன. பிரா மணர் இடையனிடம் சென்று மாடுகளைத் தருமாறு

கேட்டார். "எல்லா மாடுகளையும் நான் வேளாளனிடம் பணம் கொடுத்து வாங்கி இருக்கிறேன். நீ யார் வந்து கேட்பதற்கு" என்று இடையன் உருட்டினுன். பாவம் பிராமணர் வேறு வழியில்லாது சுகுண பாண்டியனிடம் போய் முறையிட்டார். அரசன் இடையனை அழைத்து விசாரித்ததில் அவன் அந்த மாடுகள் தன்னுடையனவே என்று சாதித்தான். இருவரையும் அழைத்துக் கொண்டு பாண்டியன் வீரவனம் வந்து அங்குள்ள சிவகெங்கைத் தீர்த்தத்தைக் காட்டி "இதில் மூழ்கி இருவரும் சத்தியம் செய்யுங்கள்'' என்று கட்டளை இட்டான். பிராமணர் அதுபோல் தீர்த்தத்தினுள்மூழ்கிச் சத்தியம்செய்து எழுந்தார், என்ன வியப்பு! அவருடைய முதுமை வடிவம் நீங்கித் திருநீலகண்டர்போல இளமை வடிவம் பெற்று நின்ருர். இடையனும் சிறிதும் அஞ்சாமல் தீர்த்தத்தினுள் மூழ்கிச் சத்தியம் செய்து எழுந்தான். உடனே அவன் இரண்டு கண்களும் அவிந்துபோயின. குருடாகிப் போன அவன் "அரசே! பத்து மாடுகள் மட்டுமல்ல. இன்னும் கூட பத்து மாடுகளும் பொருட்களும் பிராமணருக்குக் கொடுக்கிறேன், சிவபெருமானிடம் முறையிட்டுக் கண்பார்வை மீண்டும்வரும்படி அருள் செய்யவேண்டும்" என அலறினுன். அரசன் மனம் இரங்கி வீரசேகரரைத் துதித்தான். கண்பார்வை மீண்டும் வரும் என்று அசரீரி வாக்கு எழுந்தது. இடையன் கண் பெற்ருன். அது முதல் சத்தியத்திற்கு உறை கல்லாகச் சிவகெங்கைத் தீர்த்தம் இருப்பதால் சத்தியபுட்கரணி என்னும் பெயராலும் அது வழங்கப் பெறுகிறது.

## *திருமால் பூசித்த தலம்*

மகாவிஷ்ணு, பிருகு முனிவர் சாபத்தால் பூமியில் பத்துப் பிறவிகள் எடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. சாபத்தை மாற்ற முடியாவிட்டாலும் தான் எடுக்கும்

பத்துப் பிறவிகளிலும் யாரிடமும் தோல்வியுருத வலிமை தனக்கு இருக்கவேண்டும் என்று திருமால் விரும்பினர். அதற்கு ஒரேவழி பூலோகத்தில் மிகச் சிறந்த சிவத் தலமாகிய வீரவனத்திற்குச் சென்று சிவபெருமானை நோக்கித் தவம் செய்வதுதான் என உணர்ந்து வீரவனம் வந்து தவம் புரிந்தார்.

சிவபெருமான் அவருக்குக் காட்சி கொடுத்து "நீ நினைத்தபடி யாரிடமும் தோல்வியுருத வலிமையை உனக்குத் தந்தோம். இந்தச் சிறந்த தலத்தை நீ தேர்ந்தெடுத்து வந்து தவம் புரிந்ததால் இந்தத் தலத்திலேயே தென் மேற்குத் திசையில் உனக்கும் ஒரு சந்நிதி அமைத்து மக்கள் வழிபாடு செய்வார்கள். இத் தலத்தில் இருப்பவர்களும் யாரிடமும் தோல்வியுருத வலிமையைப் பெறுவார்கள்" எனக்கூறியருளினர். அது முதல் மகாவிஷ்ணுவுக்கும் தென் மேற்குத் திசையில் சந்நிதி அமைத்து அவர் வசந்த காலத்தில் வீரவனம் வந்து தவம் செய்ததால் வீரராகவப் பெருமாள் என்னும் பெயரால் அவரை மக்கள் வழிபாடு செய்து வரலாயினர்.

## *இராமபிரான் வழிபட்ட தலம்*

இராமபிரான் சீதாப் பிராட்டியாரை மீட்பதற்காக வானர சேனைகளோடு இலங்காபுரி நோக்கிச் செல்கையில், அகத்திய முனிவர் தெரிவித்தபடி வீரவனம் வந்து வீரசேகரப் பெருமானுக்கு வழிபாடு செய்தார். சுவாமி அவர்க்குக் காட்சி கொடுத்து "நீ பூரண வெற்றியுடன் திரும்புவாய். எம்மை நீ இங்கு வந்து வழிபட்டதால் வீர ராகவன் என்னும் பெயரும் உனக்கு வழங்குவதாக" எனக்கூறி யருளினர். இதனுலேயே இராமபிரானை வீர ராகவன் என்று நாம் அழைக்கிறோம்.

## பொதிசோறு உண்ட திருவிளையாடல்

ஒரு சமயம் வீரசேகரப் பெருமான் திருவிளையாடல் செய்யத்திருவுளம் கொண்டு பிராமண வடிவம் தாங்கித் திருப்பெருந்துறைக்குப் போய், அங்குள்ள பிராமணப் பிள்ளைகளுக்கு ஆசிரியராய் அமர்ந்து கல்விபயிற்றத் தொடங்கினர். அப்பொழுது அவ்வூர்ப் பிராமணர்களுக்குச் சொந்தமான நிலத்தை வேறுசிலர் தங்களுக்குச் சொந்த மானது என்று வழக்குச் செய்தார்கள். இந்த வழக்கு சுகுணபாண்டியனிடம் விசாரணைக்கு வந்தது. தங்கள் வழக்கை எடுத்துப்பேசுவதற்கு ஏற்ற சிறந்த வழக்கறிஞர் ஒருவரும் இல்லையே என்று பிராமணர்கள் கவலை யுற்றனர்கள். அங்கே பிராமண வடிவத்தில் இருந்த சுவாமி "நாம்போய் இந்த வழக்கை வென்று வருகிறோம். நீங்கள் வழியில் உண்பதற்காக பொதிசோறு சமைத்து எடுத்துக்கொண்டு நம்முடன் மதுரைக்கு வாருங்கள்" என்றார். அதுபோல் பிராமணர்களும் பொதிசோறு கட்டிக்கொண்டு சுவாமியுடன் கூடச் சென்றார்கள். வீரவனம் வந்ததும் "இங்கே எழுந்தருளியிருக்கும் வீரசேகரரை வணங்கிச் சென்றால் வெற்றி நமக்குக் கிட்டும்" என்று சுவாமி கூறினர். எல்லோரும் கோயிலுக்குள் சென்று சுவாமி தரிசனம் செய்தனர். அதன் பின் அங்கேயே தங்கிப் பிராமணர்கள் கொண்டு வந்த பொதிசோற்றை சுவாமி மிகப் பிரியமாக வாங்கி உண்டார். போசனம் முடிந்ததும் யாவரும் மதுரைக்குச் சென்றார்கள். சுகுணபாண்டியன் வழக்கை விசாரித்தான். பிராமணர்களுக்கு அந்த நிலம் சொந்தம் என்பதற்கு என்ன அடையாள மிருக்கிறது எனப் பாண்டியன் கேட்டான். அதற்குச் சுவாமி அந்த நிலத்தில் எந்த இடத்தை வெட்டினலும் தண்ணீர் சுரக்கும் என்றார். எதிர்க் கட்சிக்காரர்கள் வறண்ட அந்தப்பூமியில் தண்ணீர்

வாராது என்ருர்கள். சோதனே செய்து பார்ப்பதற்காக யாவரையும் அழைத்துக் கொண்டு அரசன் திருப்பெருந்துறைக்கு வந்தான். பிராமணர்கள் எல்லோரும் வறண்ட பூமியில் எப்படித் தண்ணீர் ஊறும்! தெரியாமல் இவரை நமக்கு வழக்கறிஞராக நியமித்தோமே என்று மிகவும் கவலேப்பட்டார்கள். அரசன் பூமியைத் தோண்டும்படி உத்தரவிட்டான். எந்த இடத்தைத் தோண்டினுலும் தண்ணீர் பெருக்கெடுத்தது. அப்பொழுது அங்கு நின்று கொண்டிருந்த சுவாமி திடீரென மறைந்தார். எல்லோரும் திகைத்தார்கள். "நாம் வீரவனத்தில் தாம் சிவலிங்க வடிவில் வீற்றிருப்போம். திருப்பெருந்துறையில் அரூபமாகவே இருப்போம்" என அசரீரி வாக்கு எழுந்தது. இது வீரசேகரர் திருவிளேயாடல் என்பதை எல்லோரும் உணர்ந்தார்கள். அரசன் பிராமணர்களுக்கே இந்த நிலம் உரியது எனத் தீர்ப்பளித்து மதுரை திரும்பினுன். புழுங்கல் அன்னம் நிவேதனம் செய்யும் வழக்கம் ஏற்பட்டது.

## உமையாண்டாள் மகிமை

இந்தத் தலத்தில் வீற்றிருக்கும் அம்பிகையின் பெயர் உமையாண்டாள் என்பதை முன் குறிப்பிட்டோம். இந்த அம்பிகையின் பெயரைச் சொன்னுலே காசம், ஈளே, இருமல், குட்டம் முதலிய எல்லா நோய்களும் நீங்கும். வெள்ளிக்கிழமை மாவிளக்கு வைத்துப் பூசை செய்வது மிகவும் விசேடம். பிள்ளேப்பேறு வேண்டினுலும், செல்வம் வேண்டினுலும், சாயுச்சிய முத்திப் பேரின்பம் அடைய வேண்டினுலும் அம்பிகையின் திருவருளால் நினேத்தபடியெல்லாம் பெறலாம். ஆகவே யாவரும் அம்பிகையை வழிபட்டு எல்லா நலன்களும் பெற்றுய்யுமாறு வேண்டுகிருேம்.

## முடிவுரை

இது காறும் கூறியவற்ருல் இந்தத் தலம் எவ்வளவு மகிமை வாய்ந்தது என்பது இனிது விளங்கும். நீண்ட ஆயுளும், நோயற்ற உடலும், பொருட் செல்வமும், இன்ப வாழ்க்கையும், இம்மையில் எய்தி மறுமையில் முத்திப் பேரின்பமும் அடைவதற்குரிய மகத்துவம் வாய்ந்த இந்தத் தலத்திற்கு யாவரும் வந்து உமையாண் டாள் சமேத வீரசேகரரைத் தரிசனம் செய்து எல்லா நலன்களும் பெற்றுப் பேரானந்தப் பெருவாழ்வு பெறு மாறு வேண்டி இதனை முடிக்கின்ருேம்.

சுபம்.

## நித்திய பூஜா காலங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | காலசந்தி | காலை | மணி | 8 - 30 |
| 2 | உச்சிக்காலம் | பகல் | மணி | 12 - 00 |
| 3 | சாயரக்ஷை | மாலை | மணி | 5 - 30 |
| 4 | அர்த்தசாமம் | இரவு | மணி | 8 - 30 |

## உத்ஸவங்கள்

**வைகாசி மாதம்** : உய்யவந்தம்மனுக்கு ரோகிணி நக்ஷத்திரம் துவங்கி பத்து நாட்கள் நடைபெறும்.

**ஆனி மாதம்** : பிரம்மோத்ஸவம் திருவோண நக்ஷத்திரத்தில் ரத உத்ஸவமாக பத்து நாட்கள் நடைபெறும்.

**ஆடி மாதம்** : ஆடிப்பூர உத்ஸவம் பத்து நாட்கள் நடைபெறும்.

**புரட்டாசி மாதம்** : நவராத்திரி உத்ஸவம் பத்து நாட்கள் நடைபெறும்.

## நித்திய உபயக் கட்டளை

1 ருக்வேதம், யஜுர்வேதம், சாமவேத பாராயணங்களும், தேவார பாராயணமும், காலசந்தி அபிஷேகத்திற்கு தேன், பால், தயிர், பஞ்சாமிர்தம், பன்னீர், இளநீர், தைலம் வகையரு அபிஷேகங்கள் மஹன்னியாச ஜபத்துடனும் உய்யவந்த அம்மன் கோவிலுக்கு தீபத்துக்கு எண்ணெயும் புதுவயல் எ. மு. குடும்பத்தாரால் நடைபெற்று வருகிறது.

2 காசிக் கங்கை அபிஷேகம் புதுவயல் ப. வ. பெரி. வீ. அ. குடும்பத்தாரால் நடைபெற்று வருகிறது.

3 தயிர் சாதக் கட்டளையும், உமையவள் கோவில் தீபத்திற்கு எண்ணெயும் புதுவயல் சித. வயி. குடும்பத்தாரால் நடைபெற்று வருகிறது.

4 பால் அபிஷேகமும், தீபத்திற்கு எண்ணெயும் உமையவள் கோவில் உய்யவந்தம்மன் கோவில்களுக்கு கண்டனூர், தெ. பெ. குடும்பத்தாரால் நடைபெற்று வருகிறது.

5 தயிர் சாதக் கட்டளை தேவகோட்டை அ. ராம. வகையரு குடும்பத்தாரால் நடைபெற்று வருகிறது.

## மின்சார விளக்குகள்

நகரத்தார்களால் பல விளக்குகள் ஏற்படுத்தி கண்டனூர், வயி. ராம. ப. பழநியப்ப செட்டியாரவர்கள் பார்வையில் நடைபெற்று வருகிறது. புதுவயல், எ. மு. குடும்பத்தாரால் வேத பாராயணப் பாடசாலையும், கண்டனூர், தெ. பெ. குடும்பத்தாரால் அன்னசத்திரமும், பசுமடமும், காளையார் கோவில் கா. செ. மடாலயத்தாரால் வேதாந்த மடமும் நடைபெற்று வருகின்றன.

---

## கல்வெட்டுகள்

1216-39 A. D. வருடங்களிலிருந்து பல பாண்டிய மன்னர்கள் அரசாண்ட காலமும் மான்யங்கள் வழங்கியதும் தெரியவருகின்றன. பலவற்றை அரசாங்கத்துத் தென்னிந்திய பதிவு நிலையத்தினர் பதிவு செய்துள்ளனர். ஏராளமான கல்வெட்டுகள் இருக்கின்றன.